# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விகாரி – ஐப்பசி, கார்த்திகை, மார்கழி

2019 – அக்டோபர், நவம்பர்

காப்பியக்கவிஞர் மீனவன் எழுதிய பரந்தாமன் பாமாலை நூல் வெளியீட்டு விழாவில்
கோவிலூர் ஆதீனத்துடன் மீனவன் அவர்கள்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விகாரி - ஐப்பசி, கார்த்திகை, மார்கழி
2019 - அக்டோபர், நவம்பர், டிசம்பர் இதழ் - 88, 89, 90



வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

பச்சைவண்ண மாலுக்குப் பின்பிறந்த பங்கயத்தைப்
பரமனுக்குத் தாரமெனும் பாவை யாளைப்
பைரவியைச் சங்கரியைப் பார்வதியை உமையவளைப்
பார்க்கவியைப் பரமசிவன் பார்த்துப் பார்த்தே

இச்சைகொள்ள வைத்தவளை இனியமுகம் கொண்டவளை
ஏழ்பிறப்பும் துணைநிற்கும் இனிய தாயை
எம்பெருமான் சிவனோடு போட்டிநடம் பயின்றவளை
ஈரடியாம் தாமரையை எமக்குக் காட்டி

அச்சமுறச் சமணர்களை அணிமதுரைப் பதியினிலே
அன்றுதிரு நீற்றாலே அயர வைத்த
அருட்காழிச் சண்பையர்கோன் ஞானப்பால் உண்ணவைத்த
அன்புடைய திருநெல்லை அம்மை யாளை

மச்சமுதல் மீனினங்கள் மகிழ்ந்துமது நதியாடி
மகிழ்கின்ற திருத்தலமாம் சமிவ னத்தை
மன்பதையில் நண்ணிவரும் மாதவர்க்கே அருள்புரியும்
மாதரசி அடிவணங்கி மகிழு வோமே

*– காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்*

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

நாம் இதுவரை மானுட இனத்தின் வாழ்விலே இயல்பாக உள்ள நான்கு பருவங்களிலே மூன்று பருவங்களைக் கடந்த மாத இதழ்களிலே படித்து அறிந்தோம். நான்காவது பருவமாகிய சன்னியாச ஆஸ்ரமம் துறவுப் பருவத்தைப் பற்றி இப்பொழுது சிந்திப்போமாக.

துறவு என்பது அனைத்து பந்த பாசங்களில் இருந்தும் தன்னை விடுவித்துக் கொண்டு பரம்பொருளைப் பற்றிச் சிந்தித்துச் சமுதாயத்திற்கு நல்ல நெறிமுறைகளைக் கற்பித்துப் பாமர மக்களும் வாழ்க்கைப் பாதையிலே அறநெறியைக் கடைப்பிடித்து வாழ்ந்து உயரச் செய்வதே ஆகும்; இதுவே துறவியரின் முக்கியமான கடமையாகும். பொதுவாகத் துறவைப் பற்றி - தன்னலம் விடுத்துப் பொதுநலம் கருதுதலே துறவறம் எனப்படும். அப்படித் தன் நலத்தை மறந்தவர்க்கு உணவும், உறைவிடமும் கொடுத்து ஆதரிக்க வேண்டியது இல்லறத்தார் கடமை என வள்ளுவர் அழுத்தமாகக் கூறுகிறார்.

***துறந்தார்க்கும் துவ்வாத வர்க்கும் இறந்தார்க்கும்***<br>
***இல்வாழ்வான் என்பான் துணை.***

***தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு***<br>
***ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.***

அதே போலத் துறவிகளும் பொதுமக்கள் பேரில் அருள் கொண்டு அவர்களுக்கு அறிவும் நெறியும் புகட்டுதல் துறவிகளின் முதல் கடமை ஆகும். திருவள்ளுவர் அழுத்தமாகத் துறவிகளுடைய குண நலன்களைப் பற்றித் துறவு எனும் அதிகாரத்தில் எடுத்துக் கூறி இருக்கிறார்.

***யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்***<br>
***அதனின் அதனின் இலன்.***

***இயல்பாகும் நோன்பிற்குஒன்று இன்மை உடைமை***<br>
***மயலாகும் மற்றும் பெயர்த்து.***

துறவிகளுடைய இலக்கணம் தன் சுற்றம், சொந்தம் அனைத்தையும் துறந்து அருளும் தவமும் நிறைந்த வாழ்க்கையை ஏற்க வேண்டும்.

இங்ஙனம் நான்கு பருவத்தில் வாழ்கின்ற மக்கள் அனைவரும் சேர்ந்து தான் தொண்டாற்றி மக்கள் வாழ்வை மேம்படுத்த முடியும். கற்கும் காலத்தில் கல்லாமல் விட்டு விட்டால் எத்துணை துயர் ஏற்படுமோ அதனைச் சொல்லிக் கூற இயலாது.

தமிழகத்திலும் பாரதத்திலும் இதுபோன்ற நான்கு பருவங்களிலும் நல்லவர்கள் வாழ்ந்த காரணத்தினால் பண்பாடு, கலாச்சாரம், வாழ்க்கை நெறிமுறை இவை அனைத்திலும் சிறப்பாக விளங்க முடிகிறது.

இன்றும் நேர்மையாகவும் நெறி முறைகளாலும் அந்த அந்தப் பருவத்திற்கு ஏற்ற முறையிலே வாழ்க்கை நடையில் எல்லோரும் உயர வேண்டும்.

*வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்*
*தெய்வத்துள் வைக்கப் படும்.*

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***

---

**இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் 28.09.2019 அன்று வேட்டுவ வரி பற்றி திரு.முத்தழகு கணேசன் அவர்களும்**
**23.11.2019 அன்று புறஞ்சேரியிறுத்த காதை பற்றி**
**திரு. M.S. இராமநாதன் அவர்களும்**
**28.12.2019 அன்று ஊர்காண் காதை பற்றி**
**முனைவர் பழனியம்மாள் அவர்களும் உரையாற்றினர்.**

---

# நினைவஞ்சலி

காப்பியக் கவிஞர் மீனவன் அண்மையில் இறைவன் திருவடி சேர்ந்தது மிகவும் வருத்தத்தைத் தரக்கூடிய செய்தியாகும். நண்பர், காப்பியக் கவிஞர் மீனவன் அவர்களைக் கோவிலூர்த் திருமடத்தின் மூலமாக 22 ஆண்டுகளாக நன்கு அறிந்துள்ளேன். நல்ல நண்பரும் கூட; ஏறக்குறைய 16 ஆண்டுகள் நானும் கவிஞரும் திருமடத்தினுடைய சேவகர்களாகப் பணியாற்றி உள்ளோம். எனவே அவருடைய கவித்திறன், இலக்கிய அறிவு, நல்ல மனம் அனைத்தும் நேரடியாக அறிந்து உணர்ந்தவன்.

திருமடத்திலே அவர்கள் பணியாற்றிய காலத்தில் நம்முடைய சற்குருநாதர் நாச்சியப்ப சுவாமிகள் கனவின் வண்ணம் அவர்களால் தொடங்கப்பட்ட கோவில் சார்ந்த கலைகளான நாதஸ்வரம், தவில், திருமுறை, கல் சிற்பம், பஞ்சலோகச் சிற்பம், மரச் சிற்பம் ஆகிய கலை வகுப்புகளில் 350 மாணவர்களுக்கு மேல் திருமடத்தில் தங்கிக் கற்று வந்தார்கள். அப்படிப்பட்ட நூற்றுக்கணக்கான மாணவர்களை, கல்வி, ஒழுக்கம், பயிற்சி ஆகியவற்றிலே தவறு செய்யாதவர்களாகக் கண்டிப்போடும், அன்போடும் நிர்வகித்து வந்தவர் கவிஞர் தான். தவறு செய்யாத வண்ணம், அத்துடன் தொடங்கப்பட்ட முதியோர் உதவித்தொகைத் திட்டத்தை ஆரம்ப காலத்தில் இருந்து அவர்கள் பணிசெய்த காலம் எல்லாம் திறம்பட, ஐயர் அன் கோ நிறுவனத்தின் உதவியுடன் நடத்தி வந்தார்கள். இந்தப் பணிகளை எல்லாம் நிறைந்த மனதோடும், முழு ஈடுபாட்டுடனும் செய்து வந்தமை மறக்க முடியாதது ஆகும்.

கவிஞர் மீனவன் அவர்கள் மிகச் சிறந்த ஆசிரியர், ஆசுகவி, எழுத்தாளர் எனப் பன்முகத் திறமை கொண்ட பெருமகனாவார். அவருடைய கவித்திறன் மிகச் சிறந்தது, வியப்பிற்குரியது. எப்பொருளைப் பற்றியும் நினைத்தமாத்திரத்தில் அருவி எனக்

கவி சொல்ல, எழுத வல்லவர். நூற்றுக்கணக்கான கவியரங்குகளிலே கலந்து கொண்டு சிறப்பித்தவர். பற்பல கவியரங்கங்களுக்குத் தலைமை ஏற்று நடத்திய பெருமைக்குரியவர். இளம் கவிஞர்களை உற்சாகமூட்டி, ஊக்கப்படுத்தி வளரச் செய்தவர். காரைக்குடி சுற்றுவட்டாரத்தில் கவிஞர் மீனவனைத் தெரியாத தமிழ் ஆசிரியர்கள், கவிஞர்கள், அறிஞர்கள், ஆர்வலர்கள் இருக்க முடியாது. மிகப் பரவலான பேரும், புகழும் கொண்ட மிகச் சிறந்த கவிஞர் மீனவன் ஆவார்கள்.

சங்க இலக்கியத்திலும், ஐம்பெரும் காப்பியத்திலும் ஆழமான அறிவை உடையவர். மாதவமேகலை என்னும் காப்பியத்தை மணிமேகலையின் திருப்புதல்வியை நாயகியாகக் கொண்டு படைத்தவர். பிற்கால பக்தி இலக்கியங்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள் பாடல்களிலும், பாசுரங்களிலும் ஈடற்ற அறிவும், ஆர்வமும் உடையவர். சங்க இலக்கியம் முதற்கொண்டு பள்ளி மாணவர்களுக்கு எளிமையாகப் புரிந்து கொள்ளும் வண்ணம் மிகச் சிறப்பாகப் பாடம் நடத்திய சிறந்த ஆசிரியப் பெருமகனார்.

கோவிலூர்த் திருமடத்தின் பணியிலிருந்து ஓய்வு பெற்ற பின்னரும், மடத்துடனும் நம்முடனும் மிகச் சிறந்த தொடர்புடையவர்கள். நம் திருமடத்தில் நடத்துகின்ற இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியிலும், வெளியிடப்படுகின்ற திருநெல்லை ஆன்மீக மாத இதழிலும் தம்முடைய பங்கை மிகச் சிறப்பாக ஆற்றியவர். இலக்கியப் பூங்காவும், திருநெல்லை இதழும் சிறப்பாகச் செயல்பெற்றுப் பேர்பெற உதவியவர். இப்படிப் பல்வகையாகத் திருமடத்திற்கும் நமக்கும் துணையாக நின்ற பெருமகனார். தமிழ்மொழி, இலக்கியம், கவிதை ஆகியவை மேன்மேலும் வளரவும், புகழ் பெறவும் மிகச் சிறந்த தொண்டாற்றியவர்.

அவருடைய மறைவு இயல்பாக நமக்குப் பெரும் வருத்தத்தை அளித்தது. திருமடத்தினுடைய உதவிக் கரங்களில் ஒன்று

செயலற்றுப் போனதும், பெரும் சோகத்தில் ஆழ்த்தியது. அன்னாருடைய ஆன்மா சாந்தியடையவும், அவருடைய கவித்திறன் வரும் இளைய தலைமுறைக்கு வழிகாட்டியாக அமைந்து சிறக்கவும், அவருடைய மனிதநேய உணர்வு மற்றவர்களுக்கு வழிகாட்டியாக அமையவும் நம்முடைய குருமுதல்வர் கோவிலூர் ஆண்டவர் திருவடியைச் சிந்தித்து வேண்டுகிறோம்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## மீனவர் அடைந்தார் மேலுலகு!

(தமிழாகரர் தெ.முருகசாமி)

பிறப்பிறப் பென்னும் பேரா றதனில்
முறைப்பா டென்னும் முறைமையில் முளைத்த
மனித்தப் பிறப்பு வாழும் வகையில்
இனித்த முடையதாய் வாழ்ந்து விட்டால்
பிறவாப் பெருநெறி பெற்றதற் கான
இறவா நிலையால் வானுறை தெய்வமாய்
ஆவர் என்றே அருங்குறட் பாவின்
ஆன்ற சான்றாய் அருங்கவி மீனவர்
ஆனார் என்பது வரலாற் றுண்மை!
ஆனாச் சிறப்பின் நகரத் தாரின்
பாடுவார் பின்னர் கண்ண தாச
நாடுபுகழ் கவிஞர் நற்றமிழ் வரிசையில்
காப்பியக் கவிஞர் மீனவர் என்பது
நாப்புகழ்ந் திட்ட நற்றமிழ் உண்மை!
ஆசுகவி பாடும் அற்புதக் கவிஞர்!
பேசும் அவர் புகழ் பற்பல வாகும்!
மாமயி லத்தில் மாத்தமிழ் கற்றார்!
மாப்புகழ் புதுவயல் பள்ளிப் பணியால்

காள மேகக் கவிஞர் போல
நாளும் வளர்ந்தார்! நூல்பல நெய்தார்!
பற்பல விருது பாராட் டெல்லாம்
பணமுடிப் போடே பாரினில் பெற்றார்!
தமிழ்க்கடல் இராய. சொ.வுடன் கொண்ட
தமிழ்த்தொடர் போடே தமிழ்க்கல் லூரியின்
அவைக்களக் கவியெனும் அரும்புகழ் பெற்றார்!
நவையில் வேதாந்த கோவிலூர் மடாலய
குருவரு ளாலும் திருநெல்லை அம்மன்
திருவரு ளாலும் குவலயம் போற்ற
பெற்ற பெரும்புகழ் தமிழ்கூ றுலகம்
உற்றநாள் வரைக்கும் இருப்பதற் கான
மாதவ மேகலை மாக்கொடை தானும்
ஆதவன் உளவரை அறையும் என்பதால்
மேலுல கடைந்த மீனவர் வாழ்வு
சாலும் சரித்திரச் சான்றென் போமே!

## என்று காண்போம்?

(ம. கார்மேகம்)

நாவலராய் நற்றமிழ்க்குக் கிடைத்தமகன் நண்பர்க்கே
நல்லதமிழ் ஆசானாய்த் திகழ்ந்த மேலோன்
கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகளின் உள்ளத்தில்
குடியிருந்து கோலோச்சி வாழ்ந்த மேதை
பூவிருக்கும் தேனருந்தப் புலம்பிவரும் வண்டினம்போல்
புலவரிவர் சொல்கேட்டு வளர்ந்தோர் பல்லோர்
காவியத்தைப் படைத்தகவி கவியரங்கில் பலகவிதை
கனித்தமிழில் தந்தகவி மறைந்து போனார்!

திருநெல்லை ஆசானாய்த் திகழ்ந்தகவி இதழ்தோறும்
தீட்டிவந்த இறைவணக்கப் பாடல் கேட்கத்
திருவுள்ளம் கொண்டவரைத் திருநெல்லை அழைத்தாளோ
தெரியவில்லை! இவர்கவிதைத் தேனை உண்ணப்
பெருவிருப்பில் கொற்றவாள் ஈசனுமே இவர்தம்மைப்
பேரன்பால் அழைத்தானோ புரிய வில்லை
கருவிருக்கும் போதினிலே கவிசொல்லி வளர்ந்த மகன்
கனவாக மறைந்தாரே! கவலை கொண்டோம்!

காப்பியக் கவிஞரென்றும் கவிமா மணிஎன்றும்
கற்றறிந்தோர் பாராட்டும் கவிதை வேந்தன்
யாப்பறிந்த பெரும்புலவன்; மீனாட்சி சுந்தரப்பேர்
வாய்த்ததனால் திருமடங்கள் போற்ற வாழ்ந்தார்
பூப்போலச் சிரிப்பு வரும் பொசுக்கென்று சினம் பொங்கும்
புதுப்பிள்ளை குணமாக மாறிப் போகும்
பாப்புனையும் கவிஞர்க்குப் பாசமுடன் வழிகாட்டிப்
பாவாண்ட மீனவனார் மறைந்து போனார்!

இம்மென்றால் இருநூறு கவிதைகளைச் செய்கின்றார்
இருந்திட்டார் என்பார்கள்; பார்த்த தில்லை
நம்கவிஞர் மீனவனார் நாச்சொல்லும் கவிகேட்ட
நாளின்பின் உண்மையென அறிந்து கொண்டோம்!
செம்மொழியில் தேர்ந்தவராய் சிறப்புமிகு பாவலராய்,
திறம்மிக்க நூல்கள் பல தந்த சான்றோர்
எம்மொழிக்கே இலை என்ற ஏக்கத்தை நீக்கியவர்
ஏங்கவைத்துச் சென்றுவிட்டார் என்று காண்போம்?



# மணிமேகலையின் ஆளுமைத் திறன்

(முனைவர் அ.சங்கர்தாஸ், தமிழ் உதவிப் பேராசிரியர்,
நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி)

மக்கள் வாழ்வியலில் சாதாரண மக்களைக்கூட உயர்ந்த நிலைக்கு எடுத்துச் சென்ற காலம் காப்பிய காலம். சிலப்பதிகாரமும், மணிமேகலையும் இரட்டைக் காப்பியங்களாகும். முதல் புத்த சமயக் காப்பியமான மணிமேகலையில் காட்சி, மக்கள், கொள்கைகள், ஒழுக்கநிலை, பழக்க வழக்கங்கள், பெண்டிர் நிலை, பண்பாடு, சமூகநீதி, கலைகள் போன்றவை சிறப்பித்துக் கூறப்படுகின்றன. தனிமனிதனுடைய எண்ணங்கள், செயல்படும் முறை நடத்தைகள் அவன் பிறருடன் பழகும் முறை, மனப்பான்மைகள், வாழ்க்கைத் தத்துவம், அறிவாற்றல் உணர்ச்சிகள் போன்றவை சார்ந்த தொகுப்பிலிருந்து அவனுக்கு ஏற்படும் தனித்தன்மையே ஆளுமை. கணிகையர் குலத்தில் நாட்டியப் பெண்ணாக வாழ்ந்த மாதவியின் மகள் மணிமேகலை தன்மகள் தன் குலத்திற்கு மாறாகத் துறவுப் பெண்ணாக வாழவேண்டும் என்ற எண்ணத்துடன் வளர்த்தாள். அவ்வாறாகவே மணிமேகலை அறத்துறவியாக மாறிப் புரட்சிப் பெண்ணாக வாழ்ந்தாள். அத்தகைய காப்பியத் தலைவியான மணிமேகலை தனது பண்பு, செயல், குணம், புரட்சி என்ற ஆளுமைத் திறனால் ஒரு சமுதாயப் பெண்ணாக விளங்கியதை இக்கட்டுரை ஆராயும்.

### காதல் மனம்

உலகத்து உயிர்கள் காதலென்னும் தன்மைக்குள் அகப்பட்டு வாழ்கின்றன. ஒருவனுடைய இயல்பான திறன், உள்ளார்ந்த திறன், அனுபவம், புலன்காட்சி, நினைவு, கற்பனை, பழக்கங்கள், எண்ணங்கள், ஆக்க சிந்தனைகள், அனைத்தும் சேர்ந்தே ஆளுமையைத் தோற்றுவிக்கிறது என்பர். காதலென்னும் உணர்வில் வாழும் நிலை குறித்துத் தொல்காப்பியர், பாரதியார், பாரதிதாசன், வ.சுப.மாணிக்கனார் முறையே,

*எல்லா வுயிர்க்கும் இன்பமென்பது*
*கான மர்ந்து உருவம் மூவற்றாகும்*

*காதல் காதல் காதல்*

*காதல் போயின் சாதல், சாதல்*

*காதலடைதல் உயிரியற்கை*

*காதலென்பது உடற்சி, உள்ளப்பசி, உயிர்ப்பசி,*

*பிறவிப்பசி*

என வெளிப்படுத்தியுள்ளனர். காதல் உயிர்ப்பு மிக்கது என்பதனை பெத்தரண்ரசல் என்ற மேல்நாட்டு அறிஞர் மனித வாழ்க்கையில் காதலை இன்றியமையாதவற்றுள் ஒன்றாக நான் கருதுகிறேன். அதன் இயல்பான போக்கில் தேவையின்றிக் குறுக்கிடும் அமைப்பு எதையும் நான் வெறுக்கிறேன் என்கிறார்.

அந்தந்தக் குறிப்பிட்ட நிலத்து ஆண், பெண்களிடையே ஏற்பட்ட காதல் நிகழ்வுகளை அகப்பொருள் இலக்கணம் கூறுகிறது. காதல் ஆண், பெண் இரு உள்ளங்களின் இன்ப வெளிப்பாடு. இது உணர்வுகளில் உயர்ந்ததாகக் காணப்படுகிறது. உதயகுமரன் தன் மீது காதல் கொள்கிறான் என்பதைத் தனது தோழியான சுதமதி வழியறிகிறாள் மணிமேகலை; மேகலைக்குக் காதல் வெளிப்பட்டதை,

*புதுபோன் பின்றைப் போனதென் னெஞ்ச*

*மிதுவோ வன்னாய் காமத் தியற்கை*

என்று கூறுகிறாள். தான் விரும்பியவன் காதலனாக அமையும் போது நெஞ்சம் பின் தொடர்கிறது. இதுதான் காமத்தியற்கை என்பதன் மூலம் காதலுணர்வு வெளிப்படுகிறது. மேலும் மேகலை புத்த பீடிகையைக் கண்டு பிறப்புணர்ந்தாள். முற்பிறப்பு வாழ்க்கையை பிரமதருமன் வழி அறிகிறாள். உதயகுமரன் பிறப்பையும் அறிந்துகொள்ள விரும்புகிறாள். இதனில் காதலுணர்வு எத்தகையது, அவற்றிலிருந்து மணிமேகலை மீண்டுகாட்டுவது நோக்கம். அந்நோக்கம் நிறைவேறுவதற்குத் துறவு நிலைக்குச் செல்லவேண்டும். காதல் உணர்வைக் காட்டிலும் கடமையுணர்வில் உயர்ந்து நிற்கும் ஆளுமைப் பண்பு காணப்படுகிறது.

**துறவு**

மனிதனைத் தன்னிலைப்படுத்திக் காட்டுவது துறவு. மனிதப் பண்புகளில் தன் இன்பத்தைப் பெரிதாக நினைக்காமல்

மனதைத்துறந்து ஆற்றுதல் துறவாகும். மற்றவர்களிடம் அன்பு காட்டுதல், இழிகுணத்தை அகற்றுதல், உலகத்தோடு ஒட்டுதல், இரக்கம் காட்டுதல், வாய்மை பேசுதல் போன்றவை துறவியின் செயலாகும் என்பர்.

தன் மகள் மணிமேகலை தவத்திற்கென்றே பிறந்தவள் என்று மாதவி,

*அருந்தவப்படுத்தி வல்லவதியாவதும்*
*திருந்தாச் செய்கை தீத் தொழிற்படாஅள்*

எனும் அடிகள் குறிப்பிடும். தன்குலத்திலிருந்து மாறவேண்டும். அதற்கு இளம்வயதில் துறவு நிலைக்கு வரவேண்டும். வந்தபிறகு அறங்களைச் செய்ய வேண்டும் என்பது மாதவியின் விருப்பம். அதிலிருந்து சிறிதளவும் மாறாமல் செயலாக்கம் செய்து காட்டிய மணிமேகலையின் ஆளுமைப் பண்பு காணப்படுகிறது.

**நிலையாமை**

சங்ககாலச் சான்றோர்களின் அனுபவ உண்மைகளையே பிற்காலப் புலவர்கள் நீதிக் கருத்துகளாகப் போற்றினர். மக்கள் வாழ்வை வளப்படுத்துவதிலும் நீதிகளைக் கூறுவதிலும் இலக்கியங்கள் பெரும் பங்கு வகிக்கின்றன.

நல்லறிவாளர் நரை வருமென்றெண்ணிக் குழவிப்பருவத்திலே துறவு மேற்கொள்வர். நிலையற்ற இளமைக் காலத்தில் மகிழ்ந்திருப்பவர் முதுமைக் காலத்தில் கோலூன்றித் தள்ளாடி எழுந்திருப்பர். இவ்வாறு இளமை நிலையாமையை,

*சொல் தளர்ந்து கோல் ஊன்றிச் சோர்ந்த நடையினராய்ப்*
*பல் கழன்று பண்டம் வழிகாணும்-இல் செறிந்து*
*காம நெறிபடமுங் கண்ணிகார்க்கு இல்லையே*
*ஏம நெறிபடும் ஆறு*

என்று மக்கள் முதியவராவதையும் இளமை நிலையில்லாதையும் திருமந்திரம் குறிப்பிடுகிறது.

மணிமேகலை உதயகுமரனிடம் வயதான மூதாட்டியைக் காண்பித்துச் செழுங்கழுநீர் போன்ற கண்களில் நீர், முல்லைப்பூப்

போல் பற்கள் இப்பொழுது சுரை விதையைப் போல் மாறி அழகிழந்து காணப்படுகிறது. தோள்கள் ஒடிந்து தொங்கும் தென்னை மட்டைபோல், சுருங்கியும், நரம்பு, நகங்கள் ஒன்றுக்கொன்று தொடர்பின்றி வற்றிப்போயும், தொடை, கணைக்கால் இளமை இல்லாத பொலிவிழந்தும் உள்ளது. இதனை

*நரை மூதாட்டி யொருத்தியைக் காட்டி*
*தண்ணறல் வண்ணந் திரிந்துவேறாகி*

என்றும்,

*கழுநீர் கண்காண் வழுநீர் சுமந்தன*
*நரை முந்தனைய நகையுங்காணாய்*

என்று முதுமைத் தன்மையினை எடுத்துரைக்கிறாள். மணிமேகலை அழகு பொருந்தியவள். இந்த அழகு நிலையில்லாதது. அறம் சிறந்தது. அதன் வழியில் உதயனின் மனதை நல்வழிப்படுத்தும் தன்மை காணப்படுகிறது. இக்கூற்றின் வழியாக நிலையில்லாததைவிட நிலையான அறத்தைச் செய்ய வேண்டும் என்று மக்களை அறவழியில் செல்லத்தூண்டும் ஆளுமைப் பண்பு காணப்படுகிறது.

**உயிர்களுக்கெல்லாம் உணவு**

பசிவந்தால் பத்தும் பறந்து போதும் என்பது பழமொழி. மனிதன் பசிக்கொடுமை காரணமாக எதையும் செய்யத் தொடங்குவான். பசிக்கொடுமையில் எந்த நிலைக்கும் மக்கள் இறங்கிவிடுவர் என்பர் சாமி.சிதம்பரனார்.

மணிமேகலை அந்நிய அரசன் என்பவரிடம் நீங்கள் ஒருவர் மட்டும் அறத்தைச் செய்தால் உலகில் உள்ள குற்றமெல்லாம் அழிந்து விடுமா? விடாது. அறமெனப்படுவது யாதெனின் உலகில் உள்ள உயிர்களுக்கெல்லாம் உணவு, இருப்பிடம் இவைகளைக் கொடுத்து உதவுவது தான் அறமாகும். இதைவிடச் சிறந்த அறம் இருப்பதாக நான் அறிந்ததில்லை என்பதனை.

*அறமெனப் படுவ தியாதெனக் கேட்பின்*
*மறவா திதுகேண் மன்னுயிர்க் கெல்லாம்*
*உண்டியு முடைய முறையுளு மல்லாது*
*கண்ட தில்லெனக் காவல னுரைக்கும்*

என்று கூறினாள். உணவு, உடை, இருப்பிடம் கொடுப்பதே அறத்திலே சிறந்ததாகும். மணிமேகலை அச்சிறந்த அறத்தை எடுத்துக்கூறி அதன்வழி நடப்பதும் சிறப்பிற்குரியது. மக்களுக்கு அதை எடுத்துக்கூறி நல்வழிப்படுத்தும் ஆளுமைப் பண்பும் வெளிப்படுகிறது.

**உணவறம்**

மனித உயிர்களுக்கெல்லாம் உணவளிப்பது எவ்வுயிரும் பட்டினியில் மடியாமல் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற உண்மையை வலியுறுத்துவதாகும். பண்டை நூல்களும் இதை எடுத்தியும்புகின்றன. மணிமேகலை தன் ஆயுள் முழுவதும் அக்கடமையை ஆற்றிவந்தாள். மக்களுக்கு உணவளிப்பதே சிறந்த தர்மம், உயர்ந்த சமூக ஊதியம், தேசத்தொண்டு போன்றவையால் சமூகத்தில் மக்களை அமைதியுடன் வாழச்செய்யும் இவ்வுலக மக்கள் பட்டினியால் வருந்திச் சாகாமல் உணவளிக்க வேண்டும். அவ்வாறு செய்வோர் உயிர் காப்போர் ஆவார்.

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே என்று புறநானூறு குறிப்பிடுகிறது. உணவினால் தான் உயிர் வாழமுடியும். உணவு கொடுப்போர் உயிர் கொடுப்போர். இதனை,

*மண்திணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்*
*உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே*

என்ற அடிகள் சுட்டும். பசிப்பணி நீக்குதலே உலகின் தலையாய அறம் என்ற கருத்து கூறப்பட்டுள்ளது. மக்களை உணவு அறம் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தைத் தூண்டுவது மணிமேகலையின் ஆளுமையாகும்.

**சிறைச்சாலைகளை அறச்சாலைகளாக மாற்றுதல்**

மணிமேகலை காயசண்டிகை வடிவம் கொண்டு சம்பாபதியின் கோயிலிலிருந்து அமுதசுரபியைக் கையிலேந்திக் கொண்டு பசித்தவர்க்கு உணவளித்துச் சென்றாள். இந்நிகழ்வைப் பார்த்த அந்நகர அரசன் என் மக்கள் பசியைப் போக்க நான் என்ன செய்ய வேண்டும் என்றான். இந்நாட்டிலுள்ள சிறைச்சாலைகளை எல்லாம் அறச்சாலைகளாக மாற்றவேண்டும் என்றாள். அதுகேட்ட அரசன் அவ்வாறே செய்தான். இதனை,

*சிறையோர் கோட்டஞ் சீத்தரு ளணாஞ்சத்*
*அறவோர்க் காக்கு மதுவா ழியரென*
*அறவோர்க் காக்கின னரவாள் வேந்தன்*

என்ற அடிகள் கூறுகிறது. தன் கடமைகளைச் செய்வதில் பெண்கள் நிகரற்று விளங்கியுள்ளார்கள். மக்களைக் காப்பதற்கு சிறைச்சாலைகளை அறச்சாலைகளாக மாற்றவேண்டும் என்று மன்னனிடம் எடுத்துரைத்து மன்னனை அறவழிப்படுத்தும் ஆளுமைத்திறன் மணிமேகலை வழி அறியமுடிகிறது.

**புத்தமதக் கொள்கை**

இவ்வுலகத்தில் உள்ளோர்க்குத் துன்பம் தருவன கள்ளுண்ணல், காமம், கொலை, பொய், களவு போன்றவையென மணிமேகலை இராசமாதேவியிடம் கூறுகிறாள். இவற்றை யார் துறந்தாரோ அவரே இவ்வுலகில் இன்பமடைவார். இதனை

*கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையும்*
*உள்ளக் களவு மென் றுரவோர் துறந்தவை*

இப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன. வாழ்வில் துன்பம் இல்லாமல் சிறப்புற்று வாழ மேற்கூறியவற்றை யெல்லாம் துறந்து வாழவேண்டும். துன்பத்தைத் துறக்கும் வழியையும் செயலால் செய்து முடிப்பதிலும் மணிமேகலையின் ஆளுமை வெளிப்படுகிறது.

**முடிவுரை**

மணிமேகலை காதலுணர்வைக் காட்டிலும் மக்களுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கடமையாற்றுவது என்ற ஆளுமைப் பண்பு காணப்படுகிறது. மனிதர்களைப் பக்குவப்படுத்தி நல்வழிப்படுத்துவது துறவுநிலை என்ற கருத்து பெறப்படுகிறது.

இளமை நிலையில்லாதது, வாழ்க்கை நிலையில்லாதது, அறமே நிலையானது என்பதை வலியுறுத்தும் ஆளுமைப் பண்பு மணிமேகலையிடம் உள்ளது என்பது புலனாகிறது.

சிறந்த அறம் என்பது உணவளித்தல். அது உயிர்கொடுப்பதற்குச் சமம் என்று எண்ணத்தூண்டுதல் மணிமேகலையின் ஆளுமைப் பண்பால் வெளிப்படுகிறது. மேலும் மன்னனிடம் சிறைச்சாலைகளை அறச்சாலைகளாக மாற்றும் ஆளுமைத்திறன் உள்ளது என்பது

புலனாகும். உலகத்தில் சிறந்த மதக்கொள்கை புத்தமதக்கொள்கை. அது கடவுட்கொள்கையாகும் என்பதை மணிமேகலை உணர்த்துகிறாள். இவ்வாறு மணிமேகலை தன் ஆளுமைப் பண்புகளால் தன் குலத்தின் தன்மையிலிருந்து வேறுபட்டுச் சமுதாயத்தில் உயர்ந்த அறப்பெண்ணாக வாழ்ந்து காட்டினாள் என்பது திண்ணம்.

## பக்தியை நோக்கிய பெயரடைகள்

தமிழ்ச்செம்மல் மு.பழனி இராகுலதாசன்

தான் படைக்கும் இலக்கிய ஆக்கத்தைச் செழுமைப்படுத்துவது படைப்பாசிரியரின் உரிமையும் கடமையும் ஆகும். அவ்வாறு செழுமைப் படுத்துவதற்கு, குறிப்பிட்ட ஒரு படைப்பாசிரியன் மேற்கொள்ளும் உத்திகள் பல்திறத்தன ஆகும். உவமை, உருவகம், காட்சி விவரணை என்று அவை விரிவாக அமைகின்றன. அவற்றுள் ஒன்று தான் படைப்பாசிரியன் மேற்கொண்டு கையாளும் அடைமொழிகள் ஆகும். அவ்வாறு படைப்பாசிரியன் கையாளும் பெயர் அடைகளும், வினை அடைகளும், தொடர்புடைய படைப்புக்களுக்குச் செழுமை சேர்ப்பதோடு, பயில்வார்க்கு மிகநேரிய இலக்கிய விருந்தாகவும் அமைகின்றன. பெருங்கையானை, சிறுகண்யானை, நெடுஞ்செவிக் குறுமுயல், சிற்றில் நற்றூண், தனித்தமிழ், தேரா மன்னா, கருணை மறவன், செல்லாச் செல்வன், அவ்விய நெஞ்சு, வாரா நெறி, ஏமரா மன்னன், பயவா வினை, உலப்பிலா ஆனந்தம், உலவாக்காலம் - போன்ற சில - நாம் பல நேரங்களில் படிக்கின்ற - பெயரெச்சங்களை, பெயரெச்சத் தொடர்களை இங்கு எண்ணிப் பார்த்துக் கொள்கிறோம்.

அருட்பெரும் ஜோதி, தனிப்பெருங்கருணை, தனிப்பெருங்கருணை அருட்பெரும் ஜோதி - என்ற ஓர் அற்புதமான, உலகம் தழுவிய ஆன்மிக முழக்கத்தை அருளியவர் நம்முடைய இராமலிங்க சுவாமிகள் ஆவார். தமிழ்ச் சிந்தனையாளர் வரிசையில், வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபில் தனித்துவ இடம் வகிப்பவர்; அருட்பா - ஆறு திருமுறைகள் என வழங்கப்படுகின்ற, தேனினும் இனிய, கவிதைகள்

வழங்கியவர்; மனுமுறைகண்ட வாசகம் போன்ற, கவிதைக்கு இணையான உரைநடை நூல்களும் வழங்கியவர். மாணிக்கவாசக, நின்வாசகத்தை யான் கலந்து பாடுகிறேன் என அறிவித்து அருட்பா ஆறு திருமுறைகள் வழங்கியவர்; ஆருயிர்கட்கெல்லாம் நான் அன்பு செய்ய வேண்டும் என்று இறைவனிடம் வரம் கேட்டவர். படைத்தது கவிதை ஆதலால், தமது படைப்பை வள்ளலார் செழுமை செய்து முழுமை ஆக்கினார். அருட்பா ஆறுதிருமுறைகளிலும் தொட்டுப் பார்க்கிற இடங்களிலெல்லாம் கவித்துவம் கனிந்தும் கசிந்தும் வாசகர்களாகிய நம்மை ஈர்த்து வசப்படுத்திக் கொள்கிறது.

இலக்கியப் படைப்பு ரசக்கூறுகள் அனைத்தும், அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய், ஆனந்தமாய்ப் பூர்த்தியாகி, அருட்பாவில் தொட்ட இடமெல்லாம் தளிர்த்துத்தளிர்த்துத் தட்டுப்படுகின்றன. இலக்கியப் படைப்பு ரசனை கருதிச்சில இடங்களை மட்டுமே இங்கு காண்கிறோம்.

திருஅருட்பாவில் அருள் விளக்கமாலை என்று ஒரு பகுதி வள்ளலார் பாடியிருக்கிறார். எண்சீர் ஆசிரிய விருத்தங்கள் நூறு உள்ளன. இந்த நூறு விருத்தங்களிலும், உவமை, உருவகங்கள், காட்சி விளக்கங்கள், இன்ன பிற இலக்கிய ரசனைக் கூறுகள் ஆங்காங்கே பொன்போலப் பொருந்தவே அமைகின்றன. கல்லார்க்கும் கற்றவர்க்கும் என்று தொடங்குகின்ற புகழ்பெற்ற பாடலும், பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும் என்று தொடங்குகின்ற பாடலும் கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் என்ற கொழுதமிழ்ப் பாடலும் இந்த அருள் விளக்க மாலைப் பகுதியில்தான் அமைகின்றன. இவையும், இவைபோன்ற வேறு பிற அருட்பாக்கள் ஒருபுறம் இருக்க 54,55,56, ஆம் எண்களில் அமைந்துள்ள மூன்று அருட்பாக்கள் மட்டும் நம்முடைய கருத்தையும் கவனத்தையும் ஈர்த்துக் கொள்கின்றன.

இவை மூன்று அருட்பாடல்களிலும் தெய்வ நடத்தரசே! என்சிறுமொழி ஏற்று அருளே! என்றும் அப்பா, என் அய்யா, என் அரசே, அடி இணைக்கு என் சொன்மாலை அணிந்து மகிழ்ந்து அருளே என்றும், மணிப் பொதுவில் மாநடம்செய் அரசே, என் மாலையும் ஏற்று

அருளே என்றும் வள்ளல் பெருமான் விண்ணப்பம் செய்து கொள்கிறார். இவ்வாறு அமையும் விண்ணப்பக் கவிதைகளில் தான் இறைவனை அழைக்கும் போது வகை வகையாய், இனித்தமுடைய பெயரடைகளைப் பொருந்துமாறு அமைத்து அமைத்துக் கவிதைகளை அழகு செய்கிறார்.

பெருமானார் அமைக்கும் இனிய பெயரடைகளை நிரலே பின்வருமாறு காண்போம்:

கையாத தீங்கனியே; கயக்காத அமுதே; கரையாத கற்கண்டே; புரையாத கரும்பே! பொய்யாத பெருவாழ்வே! புகையாத கனலே! போகாத புனலே! உள்வேகாத காலே! கொய்யாத நறு மலரே! கோவாத மணியே! குளியாத பெருமுத்தே! ஒளியாத வெளியே! செய்யாத பேருதவி செய்த பெருந்தகையே! எண்ணாத மந்திரமே! எழுதாத மறையே! ஏறாத மேனிலை நின்று இறங்காத நிறைவே! பண்ணாத பூசையிலே படியாத படிப்பே! நண்ணாத மனத்தகத்தே நண்ணாத நலமே! நாடாத நாட்டகத்தே நடவாத நடப்பே! சாகாத கல்வியிலே தலையான நிலையே! சலியாத காற்றிடை நின்று ஒலியாத கனலே! ஏகாத புனலிடத்தே இடியாத புவியே! ஏசாத மந்திரத்தே பேசாத பொருளே! குலையாத வடிவு எனக்குக் கொடுத்த தனி அமுதே!

எண்சீர் ஆசிரிய விருத்தம் என்னும் யாப்புக் கட்டுக்குள், பக்திச்சுவை மிகுந்த கட்டுக்குள், அடங்காத உணர்ச்சி வெளள்ளத்துக்குள், எத்தனை எத்தனை பொருள் பொதிந்த பெயரடைகள்!

நடை என்பது பாக்கள் இயலும் திறம் என்று உரையாசிரியர் இளம்பூரணர் ஒரு குறிப்புத் தருகிறார். தெய்வீக அருளியல் கவிஞரான இராமலிங்க சுவாமிகள் தாம் பாடிய அருட்பாக்களின் நடையழகை மேன்மைப்படுத்தவும், மென்மைப்படுத்தவும் மிகவும் பொருந்துமாறும், அழகியல் மிளிருமாறும் எண்ணற்ற பெயரடை மொழிகளைப் பயன்படுத்தினார்கள். வள்ளல் பெருமான் கவிதை ஆக்கத்தில் பயன்படுத்திய பெயரடை மொழிகள் படிக்கப் படிக்க இனிமை தருவன; பக்தியை நோக்கி நம்மை அழைத்துச் செல்லும் ஆற்றல் உடையனவும் ஆகும்.

# ஐந்தொழில் நடனம்

முனைவர். மு.வள்ளியம்மை

*ஆநந்த மேசெவி அம்புயத்*
*தாளிணை அங்கைகளும்*
*ஆநந்தமே திருக்கண்ணும் செவ்வாய்*
*அருள் மேனியெல்லாம்*
*ஆநந்தமே அருட்சிற்றம் பலவர்*
*அருட் பொருளும்*
*ஆநந்தமே அவன் தில்லையும்*
*காழியும் ஆநந்தமே*

*– சிற்றம்பல நாடிகள்*

**சிதம்பரம் :**

ஓம் என்ற பிரணவத்தை முதலில் சொல்லிய பிறகே வேதம் ஓதவேண்டும் என்பது வடமொழி மரபு.

அதைப் போலவே தமிழ் வேதமாகிய திருமுறைகளைப் பிரணவ வடிவாயுள்ள திருச்சிற்றம்பலம் என்ற சொற்றொடரைச் சொல்லிய பிறகே ஓத வேண்டும் என்பது தமிழ்வேத மரபு.

*சிதம்பரம் என்பது அறிவாகாயம் எனப் பெறும் சித்-அறிவு; அம்பரம் – ஆகாயம்.*

*சித்பரவியோமமாகும் திருச் சிற்றம்பலத்துள் நின்று*
*பொற்புடன் நடம் செய்கின்ற*
*பூங்கழல் போற்றி போற்றி*

என்பது சேக்கிழார் வாக்கு. சித்பரவியோமம் என்பது அறிவாகாயம் எனப் பெறும். அதுவே பிரணவ வடிவம். அதுவே திருச்சிற்றம்பலம்.

அறிவு என்பது பதியறிவையே குறிக்கும். பசு, பாச அறிவைக் குறிப்பதில்லை. சிற்றம்பலம் – சிறுமை அம்பலம். சிற்றம்பலம் – இதுவும் ஞானாகாயப் பெருவெளியையே குறிக்கும்.

சிதம்பரம் எனினும் சிற்றம்பலம் எனினும் ஒன்றே.

**ஐந்தொழில் நடனம் :**

இச்சிற்றம்பலத்திலே நடனமிடும் பெருமானே நடராஜப் பெருமான். இவருடைய நடனம் ஐந்தொழில் நடனம். பஞ்ச கிருத்தியப் பரமானந்தத் தாண்டவம் என இதை வடமொழியில் கூறுவர்.

இவருடைய நடனத்தால் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களும் ஆனந்தமாக நடைபெறுகின்றன.

*தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில்*
*சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமாம்*
*ஊன்றுமலர்ப் பதத்தே உற்றதிரோதம் முத்தி*
*நான்ற மலர்ப் பதத்தே நாடு*

*- திருவதிகை மனவாசகங்கடந்தார்.*

என்பது உண்மை விளக்கம். படைத்தல், அவர்தம் வலதுமேல் கரத்தில் உள்ள உடுக்கை ஒலியால் நிகழ்கிறது.

காத்தல், அவர்தம் வலது கீழ்க்கரமாகிய அபயகரத்தில் நிகழ்கிறது.

அழித்தல், அவர்தம் இடது மேல்கரத்தில் உள்ள அக்கினியால் நிகழ்கிறது.

மறைத்தல், முயலகன் மீது அவர்ஊன்றிய வலது திருவடியால் நிகழ்கிறது.

அருளால், அவர்தம் தூக்கிய திருவடி என்றும், குஞ்சிதபாதம் என்றும் பேசப்பெறும் இடது திருவடியால் நிகழ்கிறது.

இவர்தம் நடனம் ஆன்மாக்கள் உய்திபெறும் பொருட்டு நிகழ்வது. ஆன்மாக்களின் இயல்புக்கேற்ப ஊனநடனம், ஞான நடனம் என இரு வேறு நடனங்களை ஒரே ஆட்டத்தில் நடராஜப் பெருமான் நிகழ்த்துகிறார்.

**ஊன நடனம் :**

ஐந்தொழிலால் தான் உயிர்கள் பிறந்தும், வாழ்ந்தும் இறந்தும் பலகோடிப் பிறவிகள் எடுக்கின்றன. எடுப்பதால் பிறவி தோறும் சிறிது சிறிதாக வளர்ச்சியடைகின்றன. வளர்ச்சி அடைய அடைய ஆசாபாசங்கள் சிறிது சிறிதாக அகல்கின்றன. ஆசாபாசம் அகன்றால் முத்திபேற்றை அடையும் தகுதியை அவை பெற்று விடுகின்றன. ஆசாபாசங்களில் உழன்றுநிற்கும் நிலையில் ஆன்மாக்கள் பெத்த நிலையில் உள்ளன. அதாவது கட்டு நிலையில் உள்ளன. கட்டுநிலையில் உள்ள இந்த பெத்தான்மாக்களைப் பக்குவப்படுத்தும் நடனத்தை ஊன நடனம் என்பர்.

ஊனம் என்பது குறைவைக் குறிப்பது. குறைவுடைய உடல் தோற்றத்தையும், பஞ்ச பூத உலகத் தோற்றத்தையும் குறிப்பது. ஊனம் – குறைவு; தசை. ஞானம் என்பது நிறைவைக் குறிக்கும்.

குறைவுடைய உயிர்களை நிறைவு செய்தற் பொருட்டு முதலில் ஊன நடனம் புரிந்து, அவ்வுயிர்களை முத்தான்மா நிலைக்கு உயர்த்துவதால் அது ஊன நடனம் எனப்பெற்றது.

**ஞான நடனம் :**

*மாயைதனை உதறி, வல்வினையைச் சுட்டு, மலம்*
*சாய அமுக்கி, அருள்தான் எடுத்து – நேயத்தால்*
*ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானமுத்தல்*
*தானெந் தையார் வரதந் தான்*

*– திருவதிகை மனவாசகங்கடந்தார்*

என உண்மை விளக்கம் தெளிவுபடுத்தும்.

பிறவியில் அருவருப்புற்று இனிப் பிறவி வேண்டாம் என்ற மனோநிலை எய்திய ஆன்மாக்கள் முத்தான்மாக்கள் எனப் பெறுவர். அவர்களை ஈடேற்றம் செய்யப் புரியும் நடனமே ஞானநடனம் எனப்பெறும்.

நடராஜப் பெருமானின் வலது மேற்கரத்தில் உள்ள உடுக்கை ஒலி முன்பு பெத்தகாலத்தில் உலகைத் தோற்றுவித்தது. அதுவே இப்போது முத்தான்மாக்களின் மாயையை உதறுகிறது.

இடது மேல் கரத்தில் உள்ள அக்கினி வல்வினையைச் சுட்டு அழிக்கின்றது. ஆணவத்தை அமுக்குகிறது.

இடது பாதம் ஆகிய குஞ்சிதபாதம் முத்தான்மாக்களாகிய உயிர்களைப் பிறவிக் கடலினின்றும் அருளால் எடுக்கிறது.

குஞ்சிதபாதமாகிய ஆடியபாதம், பிறவிக் கடலினின்றும் எடுத்த உயிர்களை, அத்திருவடியினின்றும் நெகிழ்ந்து விடாமல் அவ்வருள் திருவடியிலேயே பேரின்பம் நுகர, பெருமானின் வரதகரமாகிய இடதுகரம் தூக்கிய திருவடிக்கு மேல் வளைந்து நின்று, தூக்கிய திருவடியில் ஆன்மாக்களை, அழுத்தி, பேரின்ப வீட்டைப் பெறச் செய்கிறது.

